REGD No. TN MS (C) 244

ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS)

Phone: 812818 4 பக்கம் விலை 30

காரியம்

நாட்டில் நிலையான காரியங்கள் கட்சி வேறுபாடு இல்லாமல் நடக்கவேண்டும்.

பேரறிஞர் அண்ணா



# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

பேச்சு

சுருக்கமாகப் பேசுவோரின் வார்த்தைகளில் ஆழ்ந்தசிந்தனை தேங்கி இருக்கும்.

அண்ணல் காந்தி

● மலர்: 3 சென்னை 12—8—1979 ஞாயிறு (★) ❋ ● ❋ (✶) வெளியூர் -13-8--1979 திங்கள் (●) இதழ்: 295 ●

★ பிற்பட்டோர் சலுகை என்மகனுக்கு சலுகை காட்டவோ - கட்சி எம்.எல்.ஏ.க்களுக்கு சலுகை காட்டவோ அல்ல ★ இந்த உத்தரவின்மூலம் பிற்படுத்தப்பட்ட மக்கள் அதிக அளவில் பலன் அடைந்திருக்கிறார்கள் - இது எப்படி துரோகமாகும் ★ உழைப்புக்கு உணவு திட்டம் சென்னைக்கும் அமல்படுத்தப்படும் ★ படித்த இளைஞர்களுக்கு தொழில் செய்ய கடனுதவி - மானியம் அளிக்க அரசிடம் திட்டம் இருக்கிறது

## பிற்படுத்தப்பட்டோர்சலுகைக்குஉச்சவரம்புநிர்ணயம்பற்றி

## மக்களிடம்

# வாக்கெடுப்பு நடத்தத் தயார்

## முதல்வர்புரட்சித் தலைவர்அறிவிப்பு

சென்னை, ஆக. 12- தமிழ்நாட்டில் பிற்படுத்தப்பட்ட மக்களுக்கு வருமான வரம்பு நிர்ணய உத்தரவின் மூலம் பிற்படுத்தப்பட்ட ஏழை மக்கள் அதிகம் பலனடைந்திருக்கிறார்கள். எப்போதாவது தேவைப்பட்டால் மக்கள் மத்தியில் இது பற்றி தெரிவித்து விட்டு பொதுமக்களிடம் வாக்கெடுப்பு நடத்தவும் தயாராக இருக்கிறோம் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

அரசு உதவித் தொகை பெறும் முதியோருக்கும், ஆதரவற்ற விதவைத் தாய்மார்களுக்கும், உடல் ஊனமுற்றவர்களுக்கும் இலவசமாக புடவை-வேட்டிகள் வழங்கும்விழா நேற்று (சனிக்கிழமை) மாலை நடைபெற்றது.

வயது முதிர்ந்த பெரியவர்கள் மூதாட்டிகள், ஆதரவற்ற விதவைப் பெண்கள், உடல் ஊனமுற்ற சகோதரர்கள், சகோதரிகள் ஆகியோர் புடவை - வேட்டி வாங்க 2 ஆயிரம் பேர் வந்திருந்தார்கள்.

### பாராட்டு

விழாவுக்கு சமூக நலத்துறை ஏற்பாடு செய்திருந்தது. சமூக நலத்துறை அமைச்சர் பி. டி. எஸ். விழாவுக்கு தலைமை வகித்தார். தமிழக உணவு அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் விழாவில் பேசினார். சென்னை மாவட்ட ஆட்சித் தலைவர் வெங்கடாசலம் வரவேற்புரை நிகழ்த்தினார்.

அனைத்துக் கல்லூரி மாணவர்களின் சங்கத் தலைவர் "மாவட்டங்களில் பயிலும் மாணவர்களுக்கு 'பஸ் பாஸ்' அமல்படுத்தியதற்கும், பிற்பட்ட வகுப்பு மாணவர்களுக்கு அரசின் வருமான வரம்பு பற்றிய புதிய உத்தரவினால் பொறி இயல் கல்லூரியில் பிற்பட்ட சமூக மாணவர்கள் அதிகம் இடம் பெறச் செய்தமைக்கும்" பாராட்டு தெரிவித்து முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலை அணிவித்தார்.

வயது முதிர்ந்த பெரியவர்கள், தாய்மார்கள், விதவைப் பெண்கள், உடல் ஊனமுற்றவர்கள் ஆகியோர் ஒவ்வொருவருக்கும் உடைகளை அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கே சென்று முதல்வர் புரட்சித்தலைவர் தன் கைப்பட வழங்கினார்.

முதல்வர் பேசத் துவங்கும் முன்பு ஒருதாய் முதல்வர் புரட்சித்தலைவருக்கு மாலை அணிவித்து, முதல்வர் புரட்சித்தலைவர் பேசுவதற்காக வைக்கப்பட்டிருந்த "மைக்கை" தானே திருப்பிக் கொண்டு "இங்கே தாய்மார்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் உடைகளை வழங்கினார். எல்லா தாயும் அவருக்குத் தாய்தான். அவர் என்றும் 16 ஆக இருக்க வேண்டும் அவர் நல்லாவேவாழணும் என்றார்.

பின்னர் முதல்வர் புரட்சித் தலைவர் பேசத்துவங்கினார்.

"இங்கே எந்த மொழியில் பேசுவது என்று எனக்குத் தெரியவில்லை. மாணவர் ஒருவர் வந்தார். அவர் பேசுவதற்கு நான் மைக்கைத் திருப்பிச் சரிசெய்து கொடுத்தேன். ஒரு தாய் வந்தார். அவராகவே மைக்கை திருப்பி பேசிவிட்டுப்போனார்.

எந்தப் பதவியில் இருந்தாலும், எப்படி இருந்தாலும் மக்களுடன் இருக்க வேண்டும் என்பதற்குஇது எடுத்துக்காட்டு. பதவி என்று வந்துவிட்டால் மக்களிடம் இருந்து விலகிச் சென்று விடுவது சரியானதல்ல.

### மக்கள் தீர்ப்பு

அப்படியில்லாமல் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் மக்களோடு இணைந்து கடமையாற்றுகிறது. யாராவது மக்களிடம் இருந்து விலகிச்சென்றால் அது சரியில்லை, அகம்பாவம் வந்துவிட்டது என்று பொருள்.

இதைத்தான் அமரர் அண்ணா சொன்னார். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு என்று சொன்னார். இப்பொழுது முடிவெடுக்க வேண்டியதானாலும் சரி இந்த ஆண்டு முடிவெடுக்க வேண்டியதாக இருந்தாலும் சரி-25 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த நாடு எப்படி இருக்கவேண்டும் என்று எடுக்கப்படும் முடிவாக இருந்தாலும் சரி- மக்கள் நம்பிக்கையைப் பெற்றதாக - ஆதரவைப் பெற்றதாக இருக்கவேண்டும்.

வெளியில் இருக்கும் போது உணர்ச்சியோடு சொல்லப்படுகிறவைகளை- மறந்துவிட்டால் மக்களை ஏமாற்றிவிட்டதாகப் பொருள்,

அனைத்துக் கல்லூரி மாணவர் சங்கம் என்று இங்கே குறிப்பிட்டிருக்கிறார்கள். அதில் "Non-Political" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. மாணவர்களுக்கு வெவ்வேறுபிரச்சினைகள் இருக்கும். அவைகளை எடுத்துச் சொல்ல போராட்டம் என்பது சரியானது அல்ல.

இந்த நாட்டுக்கு எதையும் இனி செய்ய முடியாது என்ற நிலை ஏற்பட்டுவிடுமானால்-மாணவர்கள்தான் இனி செய்யமுடியும் என்ற நிலை ஏற்பட்டால் தவிர அவர்கள் சிறு சிறு பிரச்சினைகளுக்கு போராட்டம் நடத்த வேண்டாம் என்றுதான் அண்ணாசொன்னார். ஆட்சியும் சொல்கிறது, நாங்களும் சொல்கிறோம்.

எங்கள் கட்சியிலும் மாணவர் அமைப்பு இருக்கிறது. அந்தஅமைப்புஎப்படி இருக்கிறது. எப்படி வளர்ந்திருக்கிறது, எப்படி வளர்க்கவேண்டும், எப்படி செயல்படுத்த வேண்டும் என்பதைப்பற்றி எல்லாம் நாங்கள் கவலைப்பட்டுக் கொண்டிருக்கவில்லை.

எந்தக் காரணத்தை முன்னிட்டும் மாணவர்கள் படிக்கின்ற நேரத்தை- படிக்கின்ற காலத்தை வீணாக்கி விடக்கூடாது என்பதை தெள்ளத்தெளிவாக தெரிவித்துக்கொள்கிறேன்.

### இரவல் வாழ்க்கையா?

பி. ஏ. இரண்டாம் ஆண்டு படித்து வந்த ஒரு மாணவர்- பச்சையப்பன் கல்லூரியில் படித்து வந்தவர். நான் போராட்டத்தில் ஈடுபட விரும்புகிறேன் என்று அண்ணாவிடம் ஒரு மாணவர் சொன்னார். அப்பொழுது திராவிட நாடு கேட்டுவந்த நேரம்.

"சுதந்திரம் வேண்டும் என்று கேட்டு வந்தோம். கிடைத்துவிட்டது. அதுபோல திராவிடநாடு வேண்டும் என்று கேட்டு வருகிறோம். கிடைத்துவிட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள்.

எங்களுக்கு வயதாகிவிட்டது. சுதந்திரத்தை ஒப்படைத்தது போல நாங்கள் யாரிடம் ஒப்படைப்பது? நாங்கள் இல்லாத போது இந்த நாட்டை நடத்திச் செல்லும் பொறுப்பை யாரிடம் ஒப்படைப்பது? நீங்கள் படிப்பை பாதியில் நிறுத்தி விட்டு வந்தால் ஆட்சியை நடத்திச் செல்லும் அறிவை எங்கிருந்து பெறப் போகிறீர்கள். இரவல் வாங்கப் போகிறீர்களா? இரவல் வாங்கி வாழ்க்கை நடத்தப் போகிறீர்களா?

நாங்கள் எல்லோரும் சிறைச்சாலைக்கு போய்விட்டோம்- மடிந்துவிட்டோம் என்ற நிலை ஏற்படுமானால் அப்பொழுது மாணவர்கள் வந்து போராட்டத்தில் ஈடுபடுங்

2ம் பக்கம் பார்க்க

## முதல்வர் புரட்சித் தலைவருக்கு திருச்சியில் சிறப்பான வரவேற்பு

திருச்சி, ஆக. 12-திருச்சி வந்த முதல்வர் புரட்சித் தலைவருக்கு சிறப்பான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

புதுக்கோட்டையில் நடைபெறும் முத்தரையர் மாநாட்டில் கலந்து கொள்ள முதல்வர் புரட்சித்தலைவர் வந்தபோது ஸ்ரீரங்கம், திருச்சி போன்ற இடங்களில் உற்சாகமான வரவேற்பு கொடுக்கப்பட்டது.

ஏராளமான கழகத் தோழர்கள் கழகக் கொடிகளுடன்வந்து "அண்ணாபுகழ் வாழ்க" "புரட்சித் தலைவர் வாழ்க" என்று விண்ணதிர முழக்கமிட்டு வரவேற்றனர்.

திருச்சியில் சவுந்தரராஜன் எம். எல். ஏ., மாணிக்கம் எம்.எல்.ஏ. காத்தமுத்து எம்.எல்.ஏ., நல்லுசாமி, மாவட்ட ஆட்சித்தலைவர்சீனிவாசன் மற்றும் பலர் புரட்சித் தலைவரை வரவேற்றனர்.

நாளை

அண்ணா

இதழில்

அமைச்சர்

**பண்ருட்டி**

எழுதும்

கட்டுரை

இடம் பெறும்

★★

சென்னையில் முதியவர்களுக்கு உடை வழங்கும் விழாவில் அமைச்சர்கள் எட்மண்ட், பி. டி. எஸ். ஆகியோர் ஆற்றிய உரை நாளை (திங்கள்) 'அண்ணா' இதழில் வெளிவரும்.

## சென்னையில் தடை உத்தரவு நீடிப்பு

சென்னை, ஆக. 12- சென்னைநகரில் போலீஸ் தடை உத்தரவு மேலும் நீடிக்கப்பட்டிருக்கிறது.

சென்னைநகரில் போலீஸ் தடையுத்தரவு ஏற்கனவே அமலில் இருக்கிறது.

இப்போது இம்மாதம் 13 ஆம் தேதி மாலை 6- மணி முதல் 28-ம் தேதி மாலை 6 மணி வரை தடை உத்தரவு மேலும் நீடிக்கப்பட்டு இருக்கிறது.

## வாக்குறுதியை மீறி கட்சியை உடைத்த சரண்சிங் கும்பல்

### ஜெகஜீவன்ராம் காட்டமான தாக்கு

ஐதராபாத், ஆக 12-காந்தி சமாதியில் எடுத்த உறுதிமொழி வாக்குறுதிகளைமீறி ஜனதாக் கட்சியை சரண்சிங் கோஷ்டியினர் உடைத்து விட்டனர் என்று ஜெகஜீவன்ராம் கடுமையாகச் சாடினார்.

ஐதராபாத்தில் நடந்த ஜனதாக் கட்சிப் பொதுக் கூட்டத்தில் ஜெகஜீவன்ராம் பேசுகையில் கூறியதாவது:

ஜனதாக் கட்சி வெற்றி பெற்றவுடன் காந்திசமாதியில்அனைவரும்உறுதிமொழி ஏற்றோம். நாங்கள் ஒற்றுமையாக இருப்போம். நாட்டுக்காக உழைப்போம் என்று காந்தி சமாதியில் உறுதி மொழி ஏற்றோம்.

ஆனால்சரண்சிங்கோஷ்டியினர் அந்த உறுதி மொழியை மீறி ஜனதாக் கட்சியை உடைத்துவிட்டனர்,

தெரியாத்தனமாக ஜனதாக் கட்சியைவிட்டுவெளியேறியவர்கள் கட்சிக்குதிரும்புமாறு கேட்டுக் கொள்கிறேன்,

சரண்சிங் உள்துறை அமைச்சராக இருந்தபோது, இந்திரா மீது நூரம்பர்க் பாணியில் விசாரணை நடத்தவேண்டும் என்றார். ஆனால் இப்போதோ அதே இந்திராவின் ஆதரவை அவர் நாடுகிறார்.

அவர் நிதி அமைச்சராக இருந்தபோது ஏழைஎளிய மக்களுக்காகப் பாடுபடுவதாக ஓயாமல் பேசி வந்தார்.

### நடந்தது என்ன ?

ஆனால் நடந்தது என்ன? ஏழை எளிய மக்கள் பயன்படுத்தும் மண்ணெண்ணெய், தீப்பெட்டி, பீடி போன்றவற்றுக்குத் தாறுமாறாக வரியைப் போட்டுத் தீட்டினார் சரண்சிங்.

சரண்சிங் அரசை ஆதரிப்போம் என்று கூறியவர்கள் எல்லாம் அவரை எதிர்க்கத் தலைப்பட்டு விட்டார்கள்.

அமைச்சரவை அமைப்பு வேலையும் இன்னும் பூர்த்தி அடையவில்லை. மந்திரி ஆக ஆசைப்பட்டு இன்னும் பலபேர் இருக்கிறார்கள்.

ஆனாலும்சுவரண்சிங்காங்கிரசில் சிலர் 20:ந்தேதி ஓட்டெடுப்பின் போது மனச் சாட்சிப்படி ஓட்டளிப்போம் என்று அறிவித்திருப்பவர்கள்பாராட்டுக்குரியவர்கள்.

சுவரண்சிங் காங்கிரசில், யார்யாரை அமைச்சராக நியமிக்கலாம் என்றுமுடிவு செய்யும் பொறுப்பில் உள்ளவர்கள், தங்கள் தங்கள் பெயர்களை அமைச்சர் பொறுப்புக்கு பரிந்துரைசெய்துகொண்ட வேடிக்கை நடந்தது. ஜனதா (எஸ்) கோஷ்டியினரின் கொள்கைக்கோட்பாடுகளைக் கவனிக்காமல் அமைச்சர் ஆவதிலேயே அவர்கள் கவனமாக இருந்தனர்.

ஜனதாக் கட்சி அரசுக்கு தோல்வியை எதிர்க் கட்சிகள் கொடுக்கவில்லை. ஜனதா உறுப்பினர்கள் தான் தோல்வியைக் கொடுத்தனர்.

### கிழிந்த வேட்டி

பல கட்சிகள் சேர்ந்தது ஜனதா (எஸ்) கட்சி என்று சொல்லமுடியாது. பல கட்சிகளில் உள்ள சில உறுப்பினர்கள் சேர்ந்த கட்சி ஜனதா (எஸ்).

பல வேட்டிகளின் மூலைகளைக் கிழித்து ஒட்டுப் போட்டு ஒரு வேட்டி உருவாக்குவது போல் ஜனதா (எஸ்) கட்சி உருவாக்கப்பட்டுள்ளது.

ஆனால் ஜனதாக்கட்சிமக்கள் கட்சி. முன்பு மக்கள் ஜனதாக் கட்சிக்காகத்தான் ஓட்டுப் போட்டார்களே தவிர, தனிப் பட்டவர்களுக்காக ஓட்டுப் போடவில்லை,

இவ்வாறு ஜெகஜீவன் ராம்கூறினார்,

## விவசாய வருமான வரி: அரசு அறிவிப்பு

சென்னை, ஆக. 12- 1955-ம் ஆண்டு தமிழ்நாடு விவசாய வருமான வரி சட்டம், சட்டப் பிரிவு 65-ன் கீழ் தங்களது விவசாய வருமானத்தின் மேல் 1979-80 ம் வரி விதிப்பு ஆண்டிற்கு இணக்க முறையில்வரிசெலுத்தவிரும்பினால் இந்த மாதம் 16-ம் தேதிக்குள் திருத்தப்பட்ட படிவத்தில் தங்களது ராஜி மனுவை தாக்கல் செய்ய வேண்டும் என்று அரசு அறிவித்துள்ளது.

அரசு உதவித் தொகை பெறும் முதியோர், ஆதரவற்ற விதவைகள், உடல் ஊனமுற்றோருக்கு முதல்வர் புரட்சித்தலைவர் இலவச உடைகளை வழங்கினார்.

பள்ளி இறுதி தேர்வில் சிறந்து விளங்கிய மாநகராட்சி உயர்நிலைப்பள்ளி மாணவிக்கு அமைச்சர் காளிமுத்து பரிசு வழங்கினர்.

# திண்டிவனம் தீவிபத்து: வீடுகட்ட கடனுதவி பண்ருட்டி அறிவிப்பு

**திண்டிவனம், ஆக. 12-திண்டிவனத்தில் தீவிபத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு தீப்பிடிக்காத வீடுகள் கட்ட கூட்டுறவு வீடுகட்டும் திட்டத்தின் மூலம் கடனுதவி செய்ய முதல்வர் புரட்சித்தலைவர் ஒப்புக் கொண்டுள்ளார் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் தெரிவித்தார்.**

கடந்த சிலதினங்களுக்கு முன்பு திண்டிவனத்தில் ஏற்பட்டதீவிபத்தில்பாதிக்கப்பட்ட பகுதியை முதல்வர் புரட்சித் தலைவரின் விருப்பப்படி மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் திண்டிவனம் சென்று பார்வையிட்டார்.

தீப்பிடித்து எரிந்த பகுதியை பார்வையிட அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுடன் நாடாளுமன்ற உறுப்பினர் வேணுகோபால், சட்டமேலவை உறுப்பினர்கள், தங்கவேலு, ராமமூர்த்தி சட்டமன்ற முன்னாள் உறுப்பினர்கள் ராஜாராம், சகாதேவன் ஆகியோர் சென்றனர்.

பாதிக்கப்பட்ட பகுதி முழுவதையும் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் சுற்றிப்பார்த்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆறுதல் கூறினர்.

## 30 மூட்டை அரிசி

பின்னர் நிவாரணத்திற்காக கழகத்தோழர்கள் சேர்த்து வைத்திருந்த 30 மூட்டை அரிசியை ஒவ்வொரு குடும்பத்திற்கும் 20 கிலோ அரிசி வீதம் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் வழங்கினர்.

இந்த பயங்கர தீ விபத்தினல் 146 குடும்பங்கள் பாதிக்கப்பட்டுள்ளன. இவர்களின் வீடுகள் எரிந்து சாம்பலாயின.

மேலும் பாதிக்கப்பட்ட குடும்பத்தினர் வீடுகட்டிக் கொள்ள கூட்டுறவு வீடு கட்டும் திட்டத்தின் மூலம் கடன் வழங்குவதற்கு முதல்வர் புரட்சித்தலைவர் ஒப்புக் கொண்டிருக்கிறார் என்ற செய்தியை அவர்களிடம் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன்தெரிவித்தார்.

இச்செய்தியை கேட்டதும் பாதிக்கப்பட்டமக்கள் மகிழ்ச்சி தெரிவித்தனர். முதல்வர் புரட்சித்தலைவரையும் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனையும் வாழ்த்தினர்.

இந்த திட்டத்தின் மூலம் தீப்பிடிக்காத நல்ல வீடுகளைக்கட்டிக் கொள்ளலாம். இதற்காக அளிக்கப்படும் கடனை 20ஆண்டுகளில் சுலபத் தவணையில் செலுத்தலாம் என்பதையும் அமைச்சர் பண்ருட்டி எடுத்துக் கூறினர்.

இத்திட்டத்திற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்து இன்னும் ஒருமாத காலத்திற்குள் அதாவது மழைகாலத்திற்கு முன்பே பாதிக்கப்பட்டவர்கள் தங்கள் வீடுகளைக் கட்டிக் கொள்ளும் வகையில் பணம் கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கூட்டுறவுத்துறை அதிகாரிகளுக்கும், வருவாய்த் துறை அதிகாரிகளுக்கும் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் உத்தரவிட்டார்.

## அமைச்சர் உறுதிமொழி

இந்த தீ விபத்தில் படிக்கின்ற பள்ளி மாணவர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்கு இலவச பாடபுத்தகமும் சிறு விவசாயிகளுக்கு இலவச விதையும், தொழில் செய்வதற்கு குறிப்பாக சலவைத் தொழிலாளர்கள் முடித் திருத்தும் தொழிலாளர்கள் இலவச கருவிகள் வேண்டும் என்றும் அமைச்சரிடம் கேட்டனர்.

இது சம்பந்தமாக முதல்வர் புரட்சித் தலைவரிடம் கலந்து பேசி ஏற்பாடு செய்வதாக அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் மக்களிடம் தெரிவித்தார்.

---

# நெல்லை மாவட்ட அண்ணா பீடித்தொழிலாளர் சங்க நிர்வாகிகள் கூட்டம்

நெல்லை மாவட்ட அண்ணா பீடித் தொழிலாளர் சங்க நிர்வாகிகள் கலந்துரையாடல் கூட்டம் வருகிற 15-8-79 புதனன்று காலை 9 மணியளவில் திருநெல்வேலி நகராட்சி பயணியர் விடுதியில் பீடித் தொழிலாளர் நல உரிமைக்குழு உறுப்பினரும், ராதாபுரம் தொகுதி சட்டமன்ற உறுப்பினருமான ஒய். எஸ். எம். யூசுப் தலைமையில் நடைபெறவிருக்கிறது.

கூட்டத்தில் மாவட்டத்திலுள்ள அண்ணா பீடித் தொழிற்சங்க நிர்வாகிகள் பீடித்தொழிலாளர்களை தவறாமல் கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறது.

எஸ் நம்பிராஜன்
துணைத்தலைவர்
அண்ணா தொழிற்சங்க பேரவை

---

தலைமைக் கழக அறிவிப்பு: எண் 53/79

# சின்னளப்பட்டி கழகத் தோழர்களுக்கு

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் விதிமுறைகளுக்கும், கட்டுப்பாட்டுக்கும் மாறான முறையில் நடந்துகொண்ட காரணத்தாலும், கழகத்தின் நற்பெயருக்கு கேடு விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தாலும் மதுரை மாவட்டம் ஆத்தூர் தொகுதி சின்னளப்பட்டியைச் சேர்ந்த

1. மு. சு. இராமசாமி
2. எம்.எஸ். மல்லப்பன்
3. கே. மும்மூர்த்தி
4. எஸ், சதாசிவம்
5. எம். சாமிநாதன்

ஆகிய ஐவரும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தின் அடிப்படை உறுப்பினர்பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புகளிலிருந்தும் உடனடியாக நீக்கப்படுகிறார்கள்.

புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் இந்த அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

எச்.வி.ஹண்டே, எம்.எல்.சி.,
அமைப்புச் செயலாளர்,
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14,
12-8-79.

---

# அடுத்த ஆண்டு புடவை - வேட்டிகளில் அரசின் முத்திரை பொறித்திருக்கும்...

முதல்வர் அறிவிப்பு] [முதல் பக்கத் தொடர்ச்சி

கள் என்று அண்ணாசொன்னார்.

எங்கள் கட்சியைச் சேர்ந்த மாணவர்களாக இருந்தாலும் சரி- எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி- படிப்பை வீணாக்கிக் கொள்ளவேண்டாம்.

நான் அமெரிக்கா சென்றிருந்தபோது ஒரு பேராசிரியர்- தமிழ்நாட்டிலிருந்து போனவர்- என்னை வரவேற்க வந்திருந்தார். அடுத்த நாள் ''உங்களுக்கு கார் ஏற்பாடு செய்திருக்கிறேன், ஆள் ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்று சொன்னார். ஏன் இப்படி அவசரப்படுகிறீர்கள் என்று அவரிடம் கேட்டேன். நேற்று நான் விடுமுறைஎடுத்துக்கொண்டேன். இன்று நான் கல்லூரிக்குப்போகவேண்டும். தாமதமாகப்போனால்-ஏன் தாமதமாக வந்தீர்கள்? எங்கள் வரிப்பணத்தில் இருந்துதான் உங்களுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது.எங்களுடையபடிப்பில் 10 நிமிடம் வீணாகிவிட்டது. இந்த நேரத்தில் நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது வீணாகி விட்டது என்று மாணவர்களை கேட்பார்கள் என்று அந்த பேராசிரியர் கூறினர். அந்த நிலை இங்கு வந்தாக வேண்டும்.

## வீண் குறை

பிற்பட்ட சமுதாயத்தினருக்கு வருமான வரம்பை 12 ஆயிரம் ரூபாயாக ஆக்கக்கூடாதா? நாங்கள் உணர்ந்து இருக்கிறோம். வீண் குறை சொல்லுகிறார்களே, அவர்கள் வாயை அடைப்பதற்காக இதை உயர்த்தக் கூடாதா என்று மாணவர்கள் தங்கள் மனுவில் சொல்லியிருக்கிறார்கள்.

விவரம் தெரிந்த ஒருவர் சொல்லி இருக்கிறார்.முன்பு டாக்டர் மகன் டாக்டர் ஆகலாம் என்ற நிலை இருந்தது. ஆனால் இப்போது கொண்டு வந்துள்ள உத்தரவுப்படி ரிக்ஷாக்காரர் மகன் டாக்டராகலாம். ஆனால் டாக்டர் மகன் டாக்டராக முடியாது' என்றுகூறியிருக்கிறார்.

பரம்பரை என்றே இருக்கக்கூடாது என்றுசொல்லியிருக்கிறோம். ஜமீன்தார் மகன் ஜமீன்தார் என்று இருக்கக்கூடாது என்று பேசுகிறோம்.

நீதிபதி மகன் தான் நீதிபதியாக வேண்டுமா? வண்டி இழுப்பவன் மகன் படித்து நீதிபதியாகக் கூடாதா?

## எல்லாம் ஒன்று?

நானும்பிற்பட்டவகுப்பை சேர்ந்தவன் என்று வைத்துக்கொள்வோம். இங்கே மேடையில் அமர்ந்திருக்கும் அமைச்சர் எட்மண்ட் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். அவர் உழைத்துச் சம்பாதித்த பணத்தைக் கொண்டு படிக்கும் வாய்ப்பை அவரது மகன் பெற்றிருக்கிறான். பொதுப் பட்டியலில் உள்ள 51 சதவிகிதத்தில் அவன்போட்டி போடமுடியும்.

பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர் என்பதற்காக பணக்காரர்களும் வண்டி இழுப்பவர்களும், ரிக்ஷா ஓட்டுபவர்களும் எப்படி ஒன்றுவார்கள்.

9 ஆயிரத்துக்கு அதிகமாக சம்பாதிப்பவர்கள் வீட்டுக் குழந்தைகளுக்கு இடம் இல்லையா? அவர்கள் பொதுப்பட்டியலில் போட்டி போடமுடியும்.

இதற்கு முன்பு பிற்படுத்தப்பட்ட வகுப்பைச்சேர்ந்வர்கள் இஞ்சினியரிங் கல்லூரியில் 51 சதவீத இடம் தான் பெற்றார்கள் பிறகு அது 55 சதவிகிதமாக உயர்ந்திருக்கிறது. இந்த ஆண்டு 59 சதவிகித இடம் பிற்படுத்தப்பட்ட சமுதாயத்திற்கு கிடைத்திருக்கிறதுஎன்றால் இது எப்படித் துரோகம் என்று புரிந்து கொள்ள முடியவில்லை.

## இது தேவையா

5 ஆயிரம்- 10 ஆயிரம் 20 ஆயிரம் என்று கொடுத்தால் பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு இடம் கிடைக்கும் நிலை முன்பு இருந்தது. இது தேவையா? 9 ஆயிரத்திற்கு கீழே ஆண்டு வருமானம் உள்ளவர்கள் 5 ஆயிரம் ரூபாய் கொடுத்து எஞ்சினீயரிங் சீட் எம். பி. பி. எஸ். சீட் எப்படிக் கேட்க முடியும்?

எஞ்சினியரிங் கல்லூரியில் இடம்பெற்றுள்ளவர்களில் 121 பேர் 2 ஆயிரத்திற்கும் குறைவாக வருமானம் உள்ளவர்கள். 124 பேர் 2ஆயிரத்திற்கும் அதிகமானவர்கள்.

## எனக்கு என்ன லாபம்?

இந்தப்புதிய வருமான வரப்பு நிர்ணயித்ததால் எனக்கு என்ன லாபம்? எனக்குக் குழந்தைகள் கிடையாது. எங்கள் எம்.எல்.ஏ.க்களும் பயனடையமுடியாது.ஏனெனில் அவர்களது சம்பளம் 9 ஆயிரத்திற்கு மேல் போய் விடுகிறது. எனவே இது எங்களுக்காக கொண்டு வரப்படவில்லை.

12 ஆயிரமாக உயர்த்த வேண்டும் என்றார்கள். அப்படியானால் மாத வருமானம் 1000 ரூபாய். தயவுசெய்து கிராமத்துப்பக்கம் திரும்பிப் பாருங்கள்.

## எல்லாம் வரி...

கிராமத்தில் இருக்கும் மக்கள் வெற்றிலைப் பாக்கு வாங்கினால் அதில் வரி இருக்கிறது. சுண்ணாம்பு டப்பா வாங்கினால் அதில் வரி இருக்கிறது. பீடி வாங்கினால் அதில் வரி இருக்கிறது. சிகரெட்டு வாங்கினால் அதில் வரியிருக்கிறது. துணி வாங்கினால் அதில் வரி இருக்கிறது. எதிலே வரி இல்லை?

வரிசெலுத்துகிறவர்களில் நூற்றுக்கு 75 சதம், 80 சதவிகிதம்பேர் கிராம மக்கள். அவர்களுக்கு உதவி செய்ய முடியாவிட்டால் ஆட்சிதான் எதற்கு? அண்ணாவின் கொள்கை தான் எதற்கு? எங்களுக்கு பதவிதான் எதற்கு?

இதை நாங்கள் சிந்திக்கும்போது பின்னால் வருகிற சந்ததியினருக்குஇந்த ஆபத்து, விபத்து வராமல் பார்த்துக்கொள்கிறோம்.

## துயரம்

தூத்துக்குடி துயரத்திலே நான் கண்ணீர்விட்டு வந்தபோது மற்றொரு துயரத்தையும் கேள்விப்பட்டேன். வேலைக்கு உணவு திட்டத்தில் ஆண் பெண்கள் ஈடுபடும் போது- ஆண்களிடம் பணத்தைக் கொடுத்தால் அது வேறு தவறுகளுக்கு பயன்படுகிறது என்று தாய்மார்கள் என்னிடம் கூறினர்கள்.

எல்லா முதியவர்களுக்கும் உதவித் தொகைக் கொடுக்கப்பட்டு விட்டதா என்றால் இல்லை.

நல்ல எண்ணத்தோடுஇந்த திட்டத்தைக் கொண்டு வந்தார்கள்.ஒரு இடத்தில் 2500 முதியவர்கள் இருக்கிறார்கள். அதில் ஆயிரம் பேருக்கு உதவித் தொகைகொடுக்கஅதிகாரிகள்திட்டம்தீட்டுவார்கள். மீதி 1500பேருக்கு கிடைக்காது. அவர்கள் அதிகாரிகள்எடுத்துக்கொள்ளமாட்டார்கள். அப்படியும்சிலர் உண்டு.

இங்கே ஒரு தாய் தனக்கு உதவித்தொகை வந்த பணத்தையும் வைத்திருக்கிறார். மணியார்டர் ரசீதையும் வைத்திருக்கிறார். ஆனால் அவருக்கு டோக்கன் கிடைக்கவில்லை என்று என்னிடம் சொன்னார்.

## உழைப்புக்கு மதிப்பு

புடவை, வேட்டி கொடுப்பதற்கு ஏன் சுதந்திர தினத்தை தேர்ந்தெடுத்தோம். வேறு நாளை எடுத்துக் கொண்டால் அதை கட்சியின் நலனுக்காக என்று சொல்லுவார்கள். அதேபோல உழைப்புக்கு மதிப்புக் கொடுக்கும் பொங்கல் திருநாளை எடுத்துக்கொண்டிருக்கிறோம்.

சில மாவட்டங்களில் செயல்படுத்தி வரும் வேலைக்கு உணவு திட்டத்தை சென்னையிலும் செயல்படுத்த திட்டம் தீட்டியுள்ளோம். படித்துவிட்டு வேலையில்லாமல் இருப்பவர்கள் இந்தத் திட்டத்தில்சேர்ந்துபணியாற்றலாம். அவர்கள் அதை விரும்பவில்லை என்றால் கூட்டாக சேர்ந்து தொழில் தொடங்கலாம். அதற்குக் கடன் உதவி அளிக்கவும்- மானியம் கொடுக்கவும் அரசு திட்டம் வகுத்து இருக்கிறது

## கண்ணீர் கதை

தூத்துக்குடி தீவிபத்தில் ஒருவர் தப்பி வந்துவிட்டார். பிறகு உள்ளே போய் தன் மனைவியைக் காப்பாற்றினர், அவர் அதோடு முடிந்துவிட்டது என்று நின்றுவிடவில்லை, மீண்டும் உள்ளே போய் நான்கு குழந்தைகளைக் காப்பாற்றி இருக்கிறார். அதற்கு மேல் அவரால் முடியவில்லை. உடல் எல்லாம் வெந்துவிட்டது. அவர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவருகிறார், இதை எல்லாம் செய்திச் சுருளில் பார்ப்பவர்கள் யாரும் அழாமல் இருக்கமுடியாது.

## சந்திப்போம்

ஒருவர் எப்பொழுதும் குழப்பம்உண்டாக்குகிறார். போராட்டம் தொடங்குகிறார் என்றால் நாம் அமைதியாக இருக்க வேண்டும், ''அண்டம்'' என்றால்-தமிழில் ஆனாலும் சரி. இந்தியில் ஆனாலும் சரி-முட்டை என்று பொருள். உலகம் உருண்டை என்பது போய் இப்பொழுது முட்டை வடிவில் இருக்கிறது என்று கூறுகிறார்கள். அந்த அண்டம் உடைந்துவிழுவதானாலும் சரி நாம் தெளிவாக இருக்கவேண்டும். மனம் தெளிவாக இருக்கிறது. வருவதைச் சந்திப்போம் என்று இருக்கவேண்டும்

வருமான வரம்பை உயர்த்தக் கோரி மனுக் கொடுத்த மாணவர்கள் 10 நாள் பொறுத்துக் கொள்ளுங்கள். இப்பொழுது எஞ்சினியரிங் கல்லூரியில் அனுமதி முடிந்துவிட்டது. இன்னும் மருத்துவக் கல்லூரியில் முடியவில்லை. இப்பொழுது இதற்கு என்று ஒன்று- அதற்கு என்று ஒன்று ஆக்கினால் சிக்கல்ஏற்படும்.

## பிடிவாதம் இல்லை

உண்மையிலேயே இதில் தவறுஇருக்குமானால்அதை வைத்துக்கொள்ள வேண்டும் என்ற பிடிவாதம் ஒரு போதும்எங்களுக்குஇல்லை.

பிற்பட்ட சமூகத்திற்கு இன்னும்வாய்ப்புகிடைக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்.

எதிர்க்கட்சி என்பது அங்குசத்திற்கு சமமானது என்று அண்ணா சொல்லுவார். அவ்வளவு பெரிய யானையை வழி நடத்திச் செல்ல அங்குசம் பயன்படுவது போல மக்களிடம் ஆதரவு பெற்று பெரியகட்சியாக வந்து ஆட்சியில் இருக்கிறோம். எதிர்க்கட்சி அங்குசமாக வேண்டும். அவர்கள் அங்குசமாகஇருக்கஅண்ணாவின் மனம் வேண்டும். அவருக்கு அண்ணாவின்மனம்இருந்தால் அங்குசமாகஇருந்து ஆளும் கட்சி என்ற யானையை வழி நடத்திச் செல்ல பயன்படுத்தலாம். நாங்கள் மக்களோடு பேசுகிறோம். திட்டங்களைக்கொண்டுவருகிறோம்.

## வாக்கெடுப்பு

இந்த திட்டம் பற்றி எப்போவது தேவை இருந்தால் மக்கள் மத்தியில் இது பற்றி தெரிவித்துவிட்டு- ''வாக்கெடுப்பு'' வைப்போம், அதற்குத் தயாராக இருக்கிறோம். மக்கள் விரும்பவில்லை என்றால் மாற்றவும் தயங்க மாட்டோம்.இதற்காகபோராட்டம் நடத்த இருக்கிறவர்களுக்குச் சொல்லிக்கொள்கிறேன்.

''துஷ்டனைக் கண்டால் தூர விலகு என்றுசொல்லுவார்கள்''. அது போல நான் விலகிச் செல்லுகிறேன். ஆனல் விலகுவதற்கு வழியில்லை என்றால் நான் முன்னேறுவதைத் தவிர வேறு வழியில்லை.

## எச்சரிக்கை

இங்கே இவர்களுக்கு கொடுக்கப்படும் வேட்டி சேலைகளை யாராவது குறைந்த விலைக்கு வாங்கினால் அவர்கள் சிறைக்கு அனுப்பப்படுவார்கள்.

இவர்களது ஏழ்மையை பயன்படுத்தி - சேலை - வேட்டிகளை வாங்க முயற்சிப்பவர்களை கண்டுபிடிக்க ஏற்பாடு செய்யப்பட்டு இருக்கிறது. கண்டுபிடிக்கப்பட்டால் அவர்களுக்கு பெரிய தண்டனை கிடைக்கும்.

அடுத்த ஆண்டு முதல் இவ்வாறு வழங்கப்படும் சேலை வேட்டிகளில் தமிழ்நாடு அரசு முத்திரை பொறிக்கப்பட்டு வழங்கப் படும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினர்.

---

எவ்வளவு கீழ்த்தரமாக சண்டையிட்டனர்!

# சரண், பகுகுணா இருவரில் ஒருவர் விலக வேண்டும்

சந்திரசேகர் வேண்டுகோள்

**புதுடெல்லி, ஆக. 12-மிகக் கீழ்த்தரமாக ஒருவரையொருவர் தாக்கிக்கொண்ட சரண்சிங், பகுகுணா ஆகியோரில் ஒருவர் ராஜினமாச் செய்யவேண்டும் என்று சந்திரசேகர் கோரினர்.**

ஜனதாக்கட்சித் தலைவர் சந்திரசேகர் டெல்லியில்நிருபர்களுக்குப்பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

சரண்சிங்கும், பகுகுணாவும் முன்புஒருவரைஒருவர் கடுமையாக தாக்கி கடிதம் எழுதி இருக்கிறார்கள்.

பகுகுணா மிக மோசமான ஊழல் பேர்வழி என்று சரண்சிங் கூறினர். இதேபோல் பகுகுணாவும் சரண்சிங்கைத் தாக்கி பிரதமருக்குக் கடிதம் எழுதியிருந்தார்.சரண்சிங் புத்திநிலையில்லாத மனிதர் என்றும்பகுகுணா கூறியிருக்கிறார்.

இப்படிச் சண்டைபோட்டுக் கொண்ட நபர்கள் இப்போது ஒன்றாக அமைச்சரவையில் இருக்கிறார்கள். அவர்கள் ஒருவரை ஒருவர் திட்டி புகார் கூறிய விவகாரத்தைக்கூட அவர்களால் இன்னமும் மறுக்க முடியவில்லை.

அப்படிப்பட்டவர்கள் ஒன்றாக இருக்கக் கூடாது.சரண்சிங்,பகுகுணா ஆகிய இருவரில் ஒருவர் தமது பதவியை ராஜினாமாச் செய்யவேண்டும்.

பொது வாழ்வில் தரம் இருக்கவேண்டும்.

இவ்வாறு சந்திரசேகர் கூறினர்.

---

## சுதந்திர தின சிறுவர் கலை விழா

சென்னை, ஆக. 12-சுதந்திர தினத்தையொட்டி ஆகஸ்டு 15-ம்தேதி(புதன்) காலை 10 மணிக்கு சென்னை மயிலை பாரதீய வித்யா பவனில் சிறுவர்கள் கதம்ப நிகழ்ச்சி நடைபெறுகிறது.

இந்நிகழ்ச்சியில் டைரக்டர் ப. நீலகண்டன் சிறப்பு விருந்தினராக கலந்து கொள்கிறார்.

---

ராகவானந்தம் முன்னிலையில்

## சிம்சன் பேச்சு வார்த்தை

சென்னை, ஆக. 12" சிம்சன் தொழிலாளர் பிரச்சினை குறித்து அமைச்சர் ராகவானந்தம் முன்னிலையில் இன்றுபேச்சு வார்த்தை நடந்தது. தொழிலாளர் நல ஆணையர் நரசிம்மன், சிம்சன் நிர்வாகம் சார்பில் கிருஷ்ணமூர்த்தி, விஸ்வநாதன் தொழிற்சங்கம் சார்பில் குருமூர்த்தி ஆகியோர் பேச்சுவார்த்தையில் கலந்துகொண்டனர்.

பேச்சுவார்த்தை முடிவடையவில்லை.தொடர்ந்து நாளையும் நடைபெறும்.

# 75 நரிக்குறவர்களுக்கு நிலப்பட்டா: புரட்சித்தலைவர் வழங்கினார்

கடலூர், ஆக. 12- கடலூரில் நடந்த தந்தை பெரியார் நூற்றாண்டு விழாவில் புரட்சித்தலைவர் கலந்துகொண்டு விழுப்புரத்தைச் சேர்ந்த 75 நரிக்குறவர்களுக்கு நிலப் பட்டாக்களை வழங்கினார்.

விழுப்புரத்தைச்சேர்ந்த சாலமேடு பகுதி நரிக்குறவர்கள் சங்கத் தலைவர் தங்கவேலு, செயலாளர் ஜம்பு ஆகியோர் புரட்சித் தலைவரிடமிருந்து நிலப்பட்டாக்களை பெற்றுக்கொண்டனர்.

75 நரிக்குறவர்களுக்கும் நிலப்பட்டா கிடைக்க தொடர்ந்து முயன்று ஏற்பாடு செய்த விழுப்புரம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் பி.கிருஷ்ணன், நகரக் கழக அமைப்பாளர் எம். வேணுகோபால், பொருளாளர் சம்பந்தம் மற்றும் இரா. ஜோதி பிரகாசம் (மாவட்ட விவசாய செயலர்) ஆகியோர்களுக்கு நரிக்குறவர்கள் சார்பில் நரிக்குறவர்கள் சங்கத்தலைவர் தங்கவேலு, செயலாளர் ஜம்பு ஆகியோர் நன்றியை தெரிவித்துக் கொண்டார்கள். மேற்கொண்டு வீடுகட்டுவதற்கும் கடன் பெற ஏற்பாடுகள் விழுப்புரம் எம். எல். ஏ. மூலம் நடந்து வருவதாக தங்கவேலு கூறினார்.

## வள்ளுவர் கோட்டத்தில் விடுதலை நாள் இசை நிகழ்ச்சி

சென்னை, ஆக. 12- சென்னை வள்ளுவர் கோட்டத்தில் இந்த மாதம் 15ந் தேதி விடுதலை நாளையொட்டி இசை நிகழ்ச்சிகள் நடக்கின்றன.

அன்று மாலை 6 மணிக்கு எம். எம், மாரியப்பா குழுவினரின் இசை நிகழ்ச்சிகள் நடக்கும்திருநெல்வேலி மாவட்டம் மேலகரந்தை பொன்னம்மாள் குழுவினரின் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியும் நடக்கும்.

மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் இந்த இசை நிகழ்ச்சிகளுக்கு தலைமை வகிக்கிறார்.

## தூத்துக்குடி தீவிபத்து நிதி: ஸ்ரீபிரியா ரூ. 5 ஆயிரம் வழங்கினார்

சென்னை, ஆக. 12- தூத்துக்குடி திரைப்பட கொட்டகை தீ விபத்தில் பாதிக்கப் பட்டோருக்கான முதல்வரின் நிவாரண நிதிக்கு நடிகை ஸ்ரீபிரியா 5 ஆயிரம் ரூபாய் அளித்தார். செய்தி அறநிலையத் துறைஅமைச்சர் ஆர்.எம். வீயிடம் ஸ்ரீபிரியா இந்த தொகையை வழங்கினார்.

நிதியமைச்சர் நாஞ்சிலார் பேச்சு:

# படித்தவர்கள் உடனே வேலை பெற தொழில் கல்வி முறை அமல்

ராஜபாளையம், ஆக. 12- படித்தவர்களுக்கு உடனடியாகவேலைகிடைக்கவேண்டும்என்ற அடிப்படையில்தான் தமிழ்நாட்டில் தொழிற்கல்வி தொடங்கப்பட்டது என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

ராஜபாளையம் பி.ஏ.சி, ராஜாகல்வி தர்மஸ்தாபனம், பள்ளி விழாவில் தமிழக நிதியமைச்சர் நாஞ்சிலார் கலந்து கொண்டு பேசியதாவது:-

தமிழ்நாட்டில் தற்போதுள்ள கல்லூரிகளில் படித்துப் பட்டம் பெற்றவர்களுக்கே வேலைகிடைக்கவில்லை. எம். ஏ. படித்ததால் முன்பு நான் தலை நிமிர்ந்து நடந்தேன். ஆனால் இன்று எம். ஏ. படித்தவர்கள் 50 ரூபாய் சம்பளத்திற்கு கொடுத்த வேலையைச் செய்யத் தயாராக இருக்கிறார்கள்.

படித்தவர்கள், வேலையின்றி இருக்கக்கூடாது. அதிலும் பட்டம் பெற்றவர்கள் வேலையின்றி இருந்தால் சமுதாயச் சீரழிவு ஏற்படும்.

படித்தவர்கள் வேலையின்றி சும்மா இருக்கக் கூடாது. தொழில் செய்து வாழவேண்டும். அந்தக் கருத்தில்தான் மேல்நிலைப் பள்ளிகளில் தொழிற்கல்விகற்றுத்தரப் படுகிறது.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசினார்.

விழாவில்முன்னாள் துணை கவர்னர் கே.ஏ.ஏ. ராஜா பண்ணையார், ஆர்.வி.ராமசுந்தரம் ராஜபாளையம் சட்டமன்ற உறுப்பினர் கோ. தனுஷ்கோடி ஆகியோர் பேசினார்கள்.

## அண்ணா பிறந்த நாள்விழா

பெங்களூர், ஆக. 12- பெங்களூர் பிரம்மபுரத்தில் உள்ள கலையுலக மேதை எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் வருகிற செப்டம்பர் மாதம் 15-ந் தேதியிலிருந்து 23ந் தேதிவரை பேரறிஞர் அண்ணாபிறந்த நாள் விழா நடக்கிறது.

செப்டம்பர் மாதம் 19ந் தேதி காலை 9 மணிக்கு சாயிபாபா கல்யாண மண்டபத்தில் பட்டிமன்றம் நடக்கிறது. தத்துவ மேதை டி. கே. சீனிவாசன் நடுவராக பங்கேற்கும் இந்தப் பட்டி மன்றத்தில் மு. அதியமான் எல். கே. முனுசாமி, பி. முனுசாமி, கே. எஸ். வாசன், என். கோதண்டன், ஐ. சண்முகம், மனோகர், குமார் ஆகியோர் பங்கேற்கின்றனர். 19-ந் தேதி புலவர் இளஞ்செழியன் தலைமையில் கருத்தரங்கம் நடக்கிறது.

எம். சுந்தர், பி. முனியப்பா, ஐ. உலகநாதன், பெ. எழிலரசன், கோ. தாமோதரன், தாமரைச் செல்வன், மு. அதியமான் ஆகியோர் கருத்தரங்கில் பங்கேற்கின்றனர்.

23-ந் தேதி பொதுக்கூட்டம் நடக்கிறது. கூட்டத்தில் கட்டுரைப்போட்டி, நாடகப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கப்படும்.

## மெரினாவில் ஜெகஜீவன் பேசுகிறார்

சென்னை, ஆக. 12- நாடாளுமன்ற எதிர்க் கட்சித்தலைவர் ஜெகஜீவன் ராம் இன்று (ஞாயிறு) சென்னை வருகிறார். இரண்டு நாட்கள் சென்னையில் தங்குகிறார்.

பெங்களூரிலிருந்து விசேஷ விமான மூலம் இன்று (12-ந் தேதி) இரவு 7-30 மணிக்கு சென்னை வருகிறார். விமான நிலையத்திலிருந்து நேரே மெரினா கடற்கரை பொதுக் கூட்டத்துக்குச் சென்று பேசுகிறார். திங்கட்கிழமை மாலை டெல்லி செல்கிறார்.

தீப்பிடிக்காமலிருக்க சினிமா கொட்டகைகளை மாற்றி அமைக்க

# ரூ.50 ஆயிரம் கடன் உதவி

## அமைச்சர் ஆர். எம். வீ. தகவல்

சென்னை, ஆக. 12-டூரிங் கீற்றுக் கொட்டகைகளை தீப்பிடிக்காமல் பாதுகாப்பாக ஆஸ்பெஸ்டாஸ் கூரையுடன் ஒரு ஆண்டுககுள் மாற்றியமைக்க ரூ. 50 ஆயிரம் கடன் உதவி வழங்குவது குறித்து தமிழக அரசு ஆலோசனை செய்து வருவதாக அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபையின் சார்பில் மத்திய செய்தி, ஒலிபரப்புத்துறை அமைச்சர் புருஷோத்தம் கவுசிக்குக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

திரைப்பட வர்த்தக சபைத் தலைவர் பக்தவத்சலா அனைவரையும் வரவேற்றார்.

திரைப்படத் தொழிலுக்குத் தாயாக சென்னை நகரம் விளங்குகின்றது, இந்தியாவில் முதன்மையானதாகத்தென்னகமும், சென்னையும் கலைத் துறையில் விளங்குகின்றன என்று பக்தவத்சலா கூறினார்.

மத்திய மந்திரிக்கும், தமிழக அமைச்சர் ஆர்.எம் வீக்கும் பக்தவத்சலா மாலை அணிவித்தார்.

தமிழ்நாடு திரையுலகின் சார்பில் சித்ரமகால் கிருஷ்ண மூர்த்தியும், தெலுங்கு திரையுலகின் சார்பில் டி.வி.எஸ்,ராஜாவும் கருநாடக கலையுலகின் சார்பில் என். வீராசாமியும், மலையாள கலையுலகின் சார்பில் ஜேவியாரும் மத்திய மந்திரி புருஷோத்தம் கவுசிக், அமைச்சர் ஆர். எம். வீ. இருவருக்கும் மலர் மாலைகள் அணிவித்தனர்.

### ஆர். எம். வீ.

அமைச்சர் ஆர். எம். வீ. பேசும்போது கூறியதாவது:-

மத்திய செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சர் புருஷோத்தம் கவுசிக் அவர்களை தமிழகத்தின் செய்தித் துறை மக்கள் தொடர்புத் துறைகளின் பொறுப்பேற்றுள்ள அமைச்சரான நான் வரவேற்பதில் மகிழ்ச்சி அடைகின்றேன்.

இந்தியாவின் தலைநகரை விட்டு கவுசிக் அமைச்சராகப் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு முதன் முதலாக தென்னகத்திற்கு சென்னைக்குத்தான் வருகின்றார் என்று எண்ணுகின்றேன். அதற்காக மீண்டும் ஒரு முறை அவரைப் பாராட்டி தமிழக அரசின் சார்பிலும், கலையுலகின் சார்பிலும் வரவேற்றுப் பாராட்டுகின்றேன்.

தென்னிந்தியா தான் இன்று திரைப்படத் துறைக்குத் தாயாகவும் தந்தையாகவும் உள்ளது. கலைத்துறையில் இந்தியாவில் முன்னோடியாக விளங்கும் தென்னிந்தியாவின் தலைநகர் சென்னையில் முதன் முதலில் அவருக்கு வரவேற்பு அளிப்பது சிறப்பிற்குரியது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

முன்னாள் மத்திய அமைச்சராக இருந்த அத்வானி கலையுலகைப்பற்றி, அதன் வளர்ச்சி குறித்து சிந்தனை செய்தவர் - அதனைப்பற்றி அறியத் துடித்தவர்- அதே போன்று, இன்னும் ஒரு படி மேலாகக்கூட இப்போதுபொறுப்பேற்றுள்ள கவுசிக் அவர்கள் திரையுலகம் சீர்பெற மேலும் பல சலுகைகளைச் செய்வார் என்று எதிர்பார்க்கலாம்.

இதற்கு முன்பு அவர் சுற்றுலாத்துறை அமைச்சராக 2 ஆண்டுகள் இருந்த போது அவரைப்பற்றி நன்கு அறிந்துள்ளேன் என்ற முறையில் இந்த நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பொறுப்பேற்று 10 நாட்கள் தான் ஆகின்றது. அதற்குள் இவ்வளவு குறைகளைச் சொல்கிறார்களே ஏதேது பெரிய தொல்லை பிடித்த துறைபோலிருக்கிறது என்று இங்கு வைக்கப்பட்ட கோரிக்கைகளைக் கண்டு அவர் நினைத்துவிடக் கூடாது.

நான் தான் அவரை வரவேற்று இந்த விழாவினை நடத்தும்படி கூறினேன். பழம் பெருமையும், 40 ஆண்டு கால திரையுலகத் தொடர்பும் கொண்ட தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபை அவரை வரவேற்பது பெரும் சிறப்பு.

### இன்றைய நிலை என்ன

இங்கே பல கோரிக்கைகளை வைத்தனர். இவ்வளவு வேண்டுகோள்களை வைக்கின்ற நாம் நம்முடைய கடமைகளை மனிதாபிமான உணர்வோடு செய்துவிட்டோமா என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

கலையுலகிற்கு கடந்த இரண்டு ஆண்டுகளில் செய்துள்ள நன்மைகளை எண்ணிப் பார்க்க வேண்டுகிறேன்.

சங்கடங்களை நீக்கிவிட்டது சலுகைகள் போல் உள்ளதாக எண்ணலாம். இடையில் உள்ள தடைகளை எடுத்து விட்டதால் தான் இருக்குமோ என்று ஏங்கிய கலையுலகம் தமிழகத்தில் இவ்வளவு சிறப்பாக வளர்ந்திருக்கிறது. இவைகளையெல்லாம் மறந்துவிடக் கூடாது என்பதற்காக நினைவூட்டுகின்றேன்.

### எப்போது வந்தது?

சில கோரிக்கைகளை வைக்கின்றீர்கள். சமுதாயத்தில் நாம் மற்றவர்கள் மதிக்கும் அளவிற்கு இருக்க வேண்டுமென்று விரும்புகின்ற நாம், மதிக்கத்தக்க அளவுக்கு நம்மை நாமே முதலில் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

தூத்துக்குடியில் டூரிங் கொட்டகை தீ விபத்தில் மாண்டவர்கள் குடும்பங்களுக்கு உதவிடும்வகையில் 12ஆம் தேதி ஒரு நாள் திரையரங்குகளில் வசூலாகும் தொகையைத் தருவதாகத் தெரிவித்ததற்கு முதல்வர் புரட்சித் தலைவர் சார்பிலும், தமிழக அரசின் சார்பிலும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

திரைப்படத் துறைக்காக மாநில அரசு சார்பில் மத்திய அரசிடம் வாதாடி கோரிக்கைகளைப் பெறும் நிலை எப்போது ஏற்பட்டது? இரண்டு ஆண்டுகளாகத் தான் புரட்சித் தலைவர் தலைமையில் உள்ள அரசு தான் உங்கள் உடனடிக் கோரிக்கைகளை உரிய நேரத்தில் மத்திய அரசிடம் வாதாடி பலனைப் பெற்றுத் தந்தது. கலர் பிலிமுக்காக வாதாடி உடனடியாகப் பெற்றதையெல்லாம் மறந்திருக்க மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன்.

இந்தியாவில் திரைப்பட துறையில் பம்பாய் ஒரு முக்கிய இடம் வகிக்கின்றது என்றால் அதற்குக் குறையாமல் இன்னும்ஒரு படி மேலாக சென்னை விளங்குகின்றதுஎன்பதனை மத்திய அமைச்சருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்,

### ரூ 50 ஆயிரம் கடனுதவி

இந்தத் துறையில்உள்ளவர்கள் ஒரு சமுதாயக் கண்ணோட்டத்தோடு இருக்கவேண்டும்- இல்லையேல்காலவெள்ளத்தோடு அடித்துச் செல்லப்பட்டு விடுவோம், மிகவும் கவனமாக செயல்படவேண்டும்.

டூரிங்திரைப்படக் கொட்டகைகள் கீற்றுக்கொட்டகைகளாக இருக்கக் கூடாது. அவை ஓராண்டு காலத்திற்குள் பாதுகாப்பான முறையில் மாற்றியமைக்கப்பட வேண்டும் என்று முடிவெடுத்துள்ளோம்.

அப்படி ஓராண்டுக்குள் கீற்றுக் கொட்டகைகளை பாதுகாப்பாக, தீ விபத்துக்கள் ஏற்படாத வகையில் மாற்றியமைப்பதற்கு டூரிங் திரையரங்கு உரிமையாளர்கள் சிரமப்படக் கூடாது என்பதற்காக அவர்களுக்கு உதவுவது குறித்தும் அரசு ஆலோசித்து வருகிறது. தீப்பிடிக்காத ஆஸ்பெஸ்டாஸ் கூரை அமைப்பதற்கு ரூ. 50 ஆயிரம்வரைகடனாகத் தந்துதவலாமா என்பது குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் ஆலோசனை செய்து வருகின்றார். இப்படித் தாய் உள்ளத்தோடு அனைவரின் குறைகளையும் போக்கவும், உதவி செய்யவும் முன் வருகின்ற முதல்வரை பெற்றிருக்கின்றோம்.

(பலத்த ஆரவாரம்)

செமி பர்மனண்ட் தியேட்டர் கட்டுவதற்கு நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளிடமிருந்து ரூ. 50 லட்சம் கடனைப் பெற்று நூறு பேர்களுக்கு வழங்கப்பட்டது. இதன் மூலம் நாங்கள் பெற்ற அனுபவங்கள் மிகவும் கசப்பானவை!

தியேட்டர்கள் யாவும் நன்றாக இயங்கிய போதிலும், கடனைத்திருப்பித்தர திரையரங்கு அதிபர்களுக்கு மனம் வரவில்லை. ஒருலட்சத்து 20 ஆயிரம் ரூபாய் வரையில் ஒவ்வொருவருக்கும் கடனுதவி வழங்கப் பட்டுள்ளது.

கடன் வாங்குகின்ற வரையில் எப்படியாவது பெற்றுவிட முயற்சிக்கிறார்கள். வாங்கிய பிறகு அந்தக் கடனை திருப்பித் தருவதற்கு ஏனோ மனம் வரவில்லை. கடனைத் திரும்ப வசூலிக்க வேறு வழியின்றி அரசு நடவடிக்கை எடுத்தால் அதை எதிர்த்து நீதிமன்றம் சென்று தடை உத்தரவு வாங்குகின்றார்கள்.

கடன் வாங்குவது-வசதி இருந்தாலும் திருப்பிக் கொடுக்காமல் இருப்பது, வசூலிக்க அரசு நடவடிக்கை எடுத்தால் 'ஸ்டே' வாங்குவது-இது போன்ற நிலை சரிதானா?

நெஞ்சைத் தொட்டு பதில் சொல்லுங்கள்.

உங்களுக்காக உதவி செய்ய முன் வருகின்ற இந்த அரசுக்கு நீங்கள் காட்டும் நன்றி இது தானா?

### உரிமை கடமை

இப்படிப்பட்ட நிலை நீடிக்குமானால் இந்தத் துறை எக்கேடாவது கெட்டுத் தொலையட்டும். அதன் பக்கமே தலைவைத்துப் படுக்க வேண்டாம் என்று அரசு முடிவு எடுக்கும் நிலைக்கு ஆளாக்கிவிடாதீர்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இதுபோன்ற மனப்பான்மையைமாற்றிக்கொள்ளப் போகின்றீர்களா? இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறோம்.

உரிமையைப்பற்றிக்கூறுகின்ற நாம் கடமையைச் செய்வதில் கவனமாக இருக்கவேண்டும்.

இனி மேலும் இது போன்ற குறைகள் ஏற்படாமல் இருக்க நீங்கள் உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. பேசினார்.

### மத்திய மந்திரி கவுசிக்

மத்திய மந்திரி கவுசிக் பேசும்போது கூறியதாவது:

பெரும்பாலான படங்களில் மக்களுக்குத் தேவையான சமுதாயக் கருத்துக்கள் இல்லை.

படத் தயாரிப்பாளர்கள் தாங்களே உணர்ந்து பொறுப்புடன் சமூகத்துக்குத் தேவையான காட்சிகளை எடுப்பது என்ற முடிவிற்கு வந்துவிட்டால் தணிக்கை முறை தேவையில்லை.

வருமானம் ஒன்றையே மனதில் கொண்டு சமூகத்தைக் கெடுக்கும் காட்சிகள் கொண்ட வன்முறை, ஆபாசம் மிகுந்த படங்கள் எடுப்பதைத் தவிர்க்க வேண்டும்.

சாதி வேறுபாடுகள், சமூகக் கொடுமைகள் ஆகியவைகளினால் ஏற்படும் தீமைகளைப் போக்கும் வகையில் நல்ல படங்களை எடுக்க வேண்டும். திரைப்படத் தொழிலில் உள்ள பிரச்சினைகளை பரிசீலனை செய்து நல்ல முடிவை எடுப்பேன் என்று உறுதி தெரிவித்துக்கொள்கிறேன்.

திரைப்படத் தொழிலில் முன்னணியில் இருக்கும் சென்னையில் எனது நண்பர் வீரப்பன் அமைச்சராக உள்ள தமிழகத்தில் முதன் முதலாக இந்த விழாவில் கலந்து கொண்டு உங்கள் வாழ்த்துக்களையும், வரவேற்பையும் பெறுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வாறு மத்தியமந்திரி கவுசிக் கூறினார்.

தென்னிந்திய திரைப்பட வர்த்தகசபைச் செயலாளர் டி. ராமானுஜம் நன்றி கூறினார்.

## மறு ஏல விளம்பரம்

தென்னாற்காடு மாவட்டம் திட்டக்குடி தாலுக்கா மங்களூர் ஊராட்சி ஒன்றியத்தை சேர்ந்த வள்ளிமதுரம் பொதுப்பணித்துறை பாசன ஏரியிலுள்ள 1281 முதிர்ந்த கருவேலமரங்களை இதனடியில் கையொப்பமிட்டவரால் பகிரங்கமாக 16-8-79 அன்று காலை 11 மணி அளவில் மங்களூர் ஊராட்சி ஒன்றிய அலுவலகக் கட்டிடத்தில் மறு ஏலம் விடப்படும். ஏல சம்பந்தமான ஏல அறிக்கையினை மங்களூர் ஊராட்சி ஒன்றிய அலுவலகத்திலிருந்து முன் கூட்டியே அலுவலக நேரத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

மா. வடிவேல்,
ஆணையாளர்,
ஊராட்சி ஒன்றியம்,
மங்களூர்,
திட்டக்குடி வட்டம்,
தென்னாற்காடுமாவட்டம்





தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275, அவ்வைசண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன், 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004.
ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# அண்ணா





## SONATA ABOVE THE LAKE

நல்ல கதையம்சத்தோடு, கொஞ்சம் ஹாலிவுட் பாணியைக் கலந்து ரஷியாவில் தயாரிக்கப்பட்ட படம் இது.

ருடால்ப் என்ற ஒரு அறுவை சிகிச்சை நிபுணர் ஏரி-குளம் சூழ் இனிய கிராமம் ஒன்றுக்கு ஓய்வுக்குச் செல்கிருர். அங்கே ஒரு பையனுக்கு அவர் அவசர சிகிச்சை அளிக்க நேரிடுகிறது.

அந்தப்பையனின் தாய்க்கும் (அவள் ஒருஆசிரியை) டாக்டருக்கும் காதல் அரும்புகிறது.

சிறுவன்மீது அன்பு காட்டியே அவன் தாய்மீதும் காதலை வளர்க்கிருர் டாக்டர்.

அந்தப்பெண்ணின் கணவர் ஒரு குற்றத்துக்காக சிறையில் இருக்கிருர். மாமியார் வீட்டில் இருக்கும் மருமகளிடம் டாக்டர் இவ்வாறு காதலை வளர்க்கிருர்.

இறுதியில், தான் தவறு செய்வதை உணர்ந்து, கணவன் சிறையிலிருந்தாலும் தான் அவனுக்குக் கடமை தவருமனைவியாக இருக்கவேண்டும் என்று முடிவு கட்டுகிருர் அந்த ஆசிரியை லாரா.

குணுர்சிலிங்கி டாக்டராக நடித்திருக்கிருர், இணை டைரக்டரும் அவர்தான்.

ஆசிரியையாக நடித்திருப்பவர் பூஸ்த்ரிடா கைரிஷா. இருவரும் அருமையாக நடித்துள்ளனர்.

நளினமான காதல் காட்சிகள் எழில்கொஞ்சும் இயற்கை காட்சிகள் நம்மைக் கவருகின்றன.

-அ. பொ. நாராயணன்

## விஜயா துன்பம்: ஸ்ரீகாந்த் ஆறுதல்

ராதா-கோபால் இருவரும் மனமொத்த தம்பதிகள். முத்து முத்தான மூன்று குழந்தைகள். மூத்தவள் கராத்தே அழகி, இரண்டாமவள் நடனப்பிரியை, கடைக்குட்டி பியானே இசையில் ஆர்வமுள்ளவள்.

கோபால் தன்னுடைய ஒவ்வொரு குழந்தையின் எதிர்காலத்தையும் எப்படி உருவாக்க வேண்டும் என்ற எண்ணத்திலேயே தன் நாட்களை செலவழித்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று அவருக்கு பம்பாய் அலுவலகத்துக்கு மாற்றல் ஏற்பட்டது. குழந்தைகளைப்பிரியவேண்டிய நிலைக்கு ஆளானர். மனைவியிடம் தைரியம் கூறி ஊருக்குப் புறப்பட்டார்.

''உங்களுக்கு என்னிடம் உண்மையாகவே அன்பு இருந்தால் யாரும் அழக்கூடாது. சிரித்துகொண்டே இருக்கவேண்டும். அழமாட்டேன் என்று அப்பாவுக்குச் சத்தியம் செய்துக் கொடுங்கள்.'' என்று குழந்தைகளிடம் கோபால் கூற, குழந்தைகளும் சத்தியம் செய்து கொடுக்கின்றனர்.

ஆனல் தந்தையைப் பிரிந்த குழந்தை அம்முவுக்கு அழுகை அழுகையாக வர இரவு படுக்கையினின்று எழுந்து தாயிடம் வருகிருள்.

தாய் அம்முவை சமாதானப்படுத்தி ''அப்பாவுக்கு சத்தியம் செய்து கொடுத்துவிட்டு அழறது தப்பு இல்லே? வா'' என்று தன் அருகில் அழைத்து படுக்க வைத்துக் கொள்கிருள்.

இக்காட்சி ஜே.சி. அண்ட் சௌத்தி ஆர்ட்ஸ் 'தாலி இங்கே தலைவன் எங்கே' வண்ணப்படத்திற்காக ஏ.வி.எம். படப்பிடிப்பு நிலையத்தில் படமாக்கப்பட்டது. ராதாவாக கே. ஆர். விஜயா, கராத்தே வீராங்கனையாக ஸ்ரீகிதா, கோபால் வேடத்தில் ஸ்ரீகாந்த், இரண்டாவது பெண் உஷாவாக நிஷா, மூன்றுவது பெண் அம்முவாக ஷோபனு நடித்தனர்.

திரைக்கதை வசனத்தை ஏ.எல்.நாராயணன் எழுதுகிருர். ஒளிப்பதிவை ரவி பாபு கவனிக்க, வி.குமார் இசையமைக்கிருர். கிருஷ்ணன் பஞ்சு டைரக்ஷனில் வளர்ந்து வரும் இப்படம் தீபாவளிக்கு திரைக்கு வரவிருக்கிறது. ஜெயாசக்ரவர்த்தி, எஸ். ஹெச். சௌத்ரி, சங்கர்லால் பி. பஞ்சாரியா மூவரும் கூட்டாகத் தயாரிக்கின்றனர்.

## டைரக்டர் சேதுமாதவன் மாஸ்கோ பயணம்

ரஷ்ய திரைப்படத்தயாரிப்பாளர்கள் சங்கஅழைப்பின்பேரில் சென்னை பிலிம் டைரக்டர்கள் கவுன்சில் தலைவர் டைரக்டர் கே. எஸ். சேதுமாதவன் பொருளாளர் டைரக்டர் வி. சீனிவாசன் மற்றும் தயாரிப்பாளர் வி. ராமசாமி ஆகியோர் ஆகஸ்டு 6ம்தேதி மாஸ்கோ பயணமாகிருர்கள்.

இவர்கள் ஒரு வாரம் ரஷ்யாவில் சுற்றுப்பயணம் செய்து பிரபல படத் தயாரிப்பாளர்கள், டைரக்டர்கள், டெக்னீஷியன்களை சந்திப்பதோடு ரஷ்ய ஸ்டுடியோக்களுக்கும் விஜயம் செய்கிருர்கள்.

அதன் பிறகு ஆகஸ்ட் 14ம் தேதி முதல் 28-ம் தேதி வரை நடைபெறும் மாஸ்கோ சர்வதேச படவிழாவில் பங்கு கொள்கிருர்கள்.

இப்பட விழாவில் கே. எஸ். சேதுமாதவன் டைரக்ட் செய்து லட்சுமி-விக்ரம் நடித்துள்ள இந்தி 'ஜூலி' படம் இன்பர்மேஷன் பகுதியில் திரையிடப்படுகின்றது.

கே. எஸ். சேதுமாதவன் டைரக்ட் செய்து, கே. எஸ். ஆர். மூர்த்தி தயாரித்து கமலஹாசன்-ரீடா பாதுரி நடித்துள்ள மலையாள 'கன்னியாகுமரி' படம் சோவியத் யூனியன் தயாரிப்பாளர்கள், டெக்னீஷியன்கள் பார்வைக்காக திரையிடப்படுகின்றது.

இவர்கள் ஆகஸ்ட் இறுதியில் தாயகம்திரும்புகிருர்கள்.



'மாமியாரா-மருமகளா?' படத்தில் ஸ்ரீகாந்த்-ஜெயசித்ரா

★ பாலச்சந்தர் இப்படி பேசலாமா?

★ பட உலகம் பலவிதம்

கட்டுரைகள் 19-8-79-ல் வெளிவரும்

## கலை விருந்து



'எங்க ஊர் ராசாத்தி' படத்தில் ராதிகா

## நான் வாழவைப்பேன்

விதவைத்தாய். கால் முடமான தங்கை, தம்பி-இவர்களை அன்பை வாரி வழங்கி காக்கும் மூத்த மகன் உயிர் வாழ முடியாது என்ற நிலையில்தனது குடும்பத்தை வாழவைக்க செய்யாத கொலை ஒன்றைத்தான் செய்ததாக ஏற்றுக் கொள்கிருன். காதலி வழக்குரைஞர்-வாதாடி வெற்றி பெற முடியவில்லை! அவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது. வாழ வேண்டும்என்றநினைவு அவனுக்கு வரும்போது அவன்வாழ்வு முடியும் நிலை நெருங்குகிறது!

தப்பிச் சென்று கொலையாளியைக் கண்டு பிடிக்க முயற்சிக்கிருன். அவனுக்கு நல்லவன் ஒருவன் உதவுகின்ருன்.

அண்ணனுக சிவாஜி கணேசன் அருமையாக நடித்துள்ளார். கண்ணீர் விடும் தங்கையை சமாதானப்படுத்தும் இடத்திலும், காதலியுடன் கொஞ்சும்போதும் நன்ருகச் செய்துள்ளார்.

கே. ஆர். விஜயா அண்ணனிடம் வாதாடும்போதும், நீதிமன்றத்தில் வாதிடும்போதும் நன்ருக நடித்துள்ளார். ஜெய் கணேஷ் அழகாக வந்து போகிருர்.

வி.கே.ராமசாமி,மேஜர் சுந்தரராஜன், தேங்காய் சீனிவாசன், அம்முகுட்டி புஷ்பமாலா பூர்ணம் விசுவநாதன் மற்றும் பலர் நடித்துள்ளனர்.

இந்தப்படத்தில் நமது மனதைத் தொட்டு படத்தை இடைவேளைக்குப்பின் விறுவிறுப்பாகச் செல்ல வைத்திருப்பவர் மைக்கேல் ரஜனிகாந்த்!

ஆரூர்தாஸ் உரையாடல்களை எழுதியுள்ளார்.

இளையராஜா இசை அமைப்பில் இருபாடல்கள் இனிமையாக உள்ளன.

ஒளிப்பதிவு அருமையாக உள்ளது.

உணர்ச்சிமயமான குடும்பச் சித்திரங்களை எடுப்பதில் வல்லவரான யோகானந்த் நன்குஇயக்கியுள்ளார்.

## குல்மால்

(இந்தி)

வேலைகிடைக்க வேண்டுமென்பதற்காக நாகரிக இளைஞன்ஒருவன் பழமைப்பற்றுஉள்ளவன்போலவும், வைதிகஎண்ணம்கொண்டவன்போலவும் நடிக்க நேரிடுகிறது. நிலைமையைச் சமாளிக்க ஒருபொய் சொன்னவன் பொய்களை அடுக்கிக்கொண்டே போக நேரிடுகிறது. இரட்டை வேடமிட்டு முதலாளியை ஏமாற்றி அவருடைய மகளைக் காதலிக்கின்ருன். அவனுக்கு ஏற்படுகின்ற தொல்லைகளை சமாளிப்பது வெடி சிரிப்பை ஏற்படுத்தும்!

அமல் பாலேகர், ஓம் பிரகாஷ் பிந்தியா, உத்பால்தத், தேவன் வர்மா ஆகியோர் நன்கு நடித்துள்ளனர்.

ஆர்.டி. பர்மன்இனிமையாக இசையமைத்துள்ளார்.

ரிஷிகேஷ் முகர்ஜி டைரக்ட் செய்துள்ளார். பொழுது போக்கு அம்சங்கள் கொண்ட நல்லதொரு நகைச்சுவைச் சித்திரம். இப்போது தேவிபாலாவில் நடக்கின்றது.

## அங்கக்குறி

(மலையாளம்)

அநியாயமாக தன்னைச் சிறைக்கு அனுப்பி தாயும், தங்கையும் சாகக்காரணமாக இருந்தவனை ஒருவன் பழி வாங்குகிருன். மாண்டவனின் மகன் தனது தந்தையைக் கொன்றவனைப் பழி வாங்க அலைகிருன். இருவரும் யார் என்று அறியாமலே உயிருக்குயிராகப் பழகுகின்றனர்-முடிவில்-

(கதை - குப்பத்துராஜா தமிழ் படத்தினுடையது)

சீமா, ஜெயபாரதி, ஜெயன் ஆகியோர் நடித்துள்ளனர்.

இசையும், வண்ணப் படப்பிடிப்பும் நன்கு உள்ளன. படம் விறுவிறுப்பாகச் செல்கிறது. ஆனந்த் திரையரங்கில் இந்தப் படம் நடக்கின்றது.

- நாகை தருமன்

## எக்ஸ்ரே



இ. பி. கோ 302 படத்தில் சுஜாதா

## மெல்லிசைக் குழுக்கள் நூதன போட்டி

மேற்கத்திய-இந்திய பாப் இசை மெல்லிசைக் குழுக்களுக்கான நூதனப் போட்டி ஆகஸ்டு 16,17, 18 தேதிகளில் மியூசிக் அகாடெமிஅரங்கில் நடைபெறுகிறது. இந்தப் போட்டியில் தொழில் முறை, தொழில்முறையல்லாத குழுக்கள் பங்கு கொள்கின்றன. வெற்றி பெறும் குழுக்களுக்கு கோப்பைகள் வழங்கப்படும்.

சைதை செயின்ட் மார்தாஸ் பள்ளி நிதிக்காக இந்த நூதன போட்டி நடைபெறுகிறது.

சுமார் 400 மாணவர்கள் இப்பள்ளியில் படிக்கிருர்கள். இதில் 50 சதவிகிதம் உடல் ஊனமுற்ற மற்றும்அனுதைக்குழந்தைகளாகும். இவர்களுக்கு இலவசக் கல்வியுடன் எல்லா வசதிகளும் செய்து தரப்படுகின்றன.

இப்பள்ளி நிதிக்காக மியூசிக் அகாடமி அரங்கில் ஜூலை 26-ம் தேதி மாலை சுருளிராஜன் குழுவினரின் "சக்கைபோடு போடு ராஜா" ஹாஸ்ய நாடகம் நடைபெற்றது.

ஹாஸ்ய நடிகர் சுருளிராஜன் பள்ளி நிதிக்கு ரூ. 101/- வழங்கினர். நடிகை லாலண்யா பள்ளியின் சேவைகளை பாராட்டிப் பேசினர். ஜெய்சங்கர் கலந்துகொண்டு பேசினர்.

பள்ளித் தலைவர் காலின் டி. ரோமியோ அனைவரையும் வரவேற்க எம். என். ராகவன் பள்ளியின்செயல் முறையை விளக்கினர். உதவி சேர்மன் திருமதி பார்பரா வின்டர் நன்றி கூறினர்.



'அன்னை ஓர் ஆலயம்' படத்தில் தேங்காய் சீனிவாசன், ஸ்ரீபிரியா

## 'ஏணியை எட்டி உதைத்தால் உருப்படவே முடியாது'

ராதா தனது ஊமைத் தங்கை மீனுவை அழைத்துக்கொண்டு தன் தம்பி கோபுவின் வீட்டுக்குச் செல்கிருள். அங்கே---

கோபு தன் மனைவியுடன் உலகப்பயணம் போகத் திட்டம் தீட்டிக் கொண்டிருக்கிருன். ராதா வந்ததைக் கவனித்த கோபு வெறுப்புடன் அவளை உள்ளே அழைக்கிருன்.

ராதாவை வணங்கிவிட்டு, தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டு காப்பி கொண்டு வருவதற்காக கோபுவின் மனைவி உள்ளே செல்கிருள்.

கோபு தன்னுடைய அக்காவைத் தனியே அழைக்கிருன்.

''ஏன்க்கா...இங்கே வந்தாய்? பணம் தேவை என்ருல் கடிதம் எழுது.... அனுப்புகிறேன். என்றேனே நினைவில்லையா?'' என்கிருன்.

'சீச்சீ... நீயும் ஒரு மனிதனு? உன்னை பெத்தவ அங்கே சாகக்கிடக்கிருடா. அதைச் சொல்லி உன்னை அழைத்துப்போகவந்தேன். நீ கொடுக்கும் பணத்தை வாங்க வரவில்லை'' என்கிருள். இதற்குள் ஊமைத் தங்கை மீனு அந்த வீட்டில் உள்ள ஒரு அழகான கண்ணுடி பொம்மையைத் தள்ளி உடைத்து விடுகிருள். இதனுல் கோபம் அடைந்த கோபு அவளை கோபத்தோடு அடித்து விடுகிருன்.

யார் மீதோ உள்ள கோபத்தை யார் மீதோ கோபு காட்டுகிருன் என்பதைப் புரிந்து கொண்டு ஆத்திரம் அடைகிருள் ராதா. ''டேய்...உன் ஆத்திரத்தை ஏண்டா... இந்த வாயில்லாப் பூச்சியிடம் காண்பிக்கிருய்? எனக்குப் பணம் வந்தால், என் தங்கைக்கு நல்வாழ்வு தருவேன். அக்காவுக்கு நல்ல இடத்தில் கல்யாணம் செய்து வைப்பேன் என்ருயே! நீயா இப்படி நடந்துகொள்கிருய்? ஒண்ணு ஞாபகம் வைச்சுக்கடா! ஏறின ஏணியை எட்டி உதைச்ச எவனும் உருப்பட்டதில்லே'' என்றுகூறி வீட்டைவிட்டு வெளியேறுகிருள்.

இப்படியொரு காட்சி லங்கால் பிலிம்ஸ் தயாரிக்கும் 'நங்கூரம்' வண்ணப்படத்திற்காக சத்யா ஸ்டுடியோவில் படமாகப்பட்டது.

ராதாவாக லட்சுமியும், கோபுவாக மாஸ்டர் சேகரும், அவனது மனைவியாக ஜெனிதா, மீனுவாக சபிதா என்ற இலங்கை நடிகையர் நடித்தனர்.

பன்னீர் செல்வம் எழுதிய கதைக்கு ஜெயகுமார் வசனம் எழுதுகிருர்.

ஒளிப்பதிவு, டைரக்ஷன் பொறுப்பை இலங்கை டைரக்டர் திமோதி ஏற்றுள்ளார். இசையை வி.குமாரும், இலங்கை கெம்தாசாவும் இணைந்து அமைக்கின்றனர்

லங்கால் முருகேஷ் தயாரிக்கிருர். தயாரிப்பு மேற்பார்வையை விக்னராஜா கவனிக்கிருர்.

'சக்களத்தி' படத்தில் சுதாகர், ஷோபா.

## கரை கடந்த குறத்தி தடை கடந்தாள்

'கரை கடந்த குறத்தி' என்ற படத்தை திருச்சி எஸ். எம். எம். மியான் தயாரித்து வருகிருர். படம் முடிவடைந்து வெளிவரும் நிலையில் உள்ளது.

இந்த நிலையில் அவர்களுக்கு ஒரு கடிதம் வந்துள்ளது. குறத்தி என்று பெயர் வைத்திருப்பது எங்களைத்தான் குறிக்கின்றது. அப்படி வைப்பதுதவறு என்று கடிதம் எழுதியுள்ளனர். உடனே தயாரிப்பாளர் நரிக்குறவர்கள் முன்னேற்றத்திற்கு அரும்பாடுபட்டு வருபவரும் அவர்கள் சங்கத்தின் நிர்வாகிகளில் ஒருவருமான கு. ரகுபதியையும், அவரது துணைவியாரையும் அழைத்து பத்திரிகையாளர்களைச் சந்திக்க வைத்தார்.

கு.ரகுபதி என்பவர்நரிக்குறவர் முன்னேற்றத்திற்காகஉண்மையிலேயேபாடுபடுபவர். ஆகையால்தான் அந்த இனத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணையே அவர் கலப்பு மணம புரிந்து கொண்டுள்ளார்.

அவர் பத்திரிகையாளர்களிடம் கூறியதாவது:

''குறவர் இனத்தவர் என்கின்ற வரிசையில் 40க்கு மேற்பட்ட பிரிவுகள் உள்ளன. 'கரை கடந்த குறத்தி;என்ற இந்தப்படம் நரிக்குறவர் இனத்தை வைத்து எடுக்கப்பட்டுள்ளது.

நரிக்குறவர் இனத்தை இழிவுபடுத்தும் வகையிலோ, எந்த வகையிலும் குறைவுபடுத்தும் முறையிலோ 'கரை கடந்த குறத்தி'யின் கதை இல்லை.

நரிக்குறவர் இனத்தின் கட்டுப்பாடு, பண்பு, உயர்வு ஆகியவைகள் குறித்து பெருமைப்படுத்தும் வகையில் சிறப்பாகப் படமாக்கியுள்ளனர். எனவே குறத்தி என்ற பெயர் வைக்கக் கூடாது என்று சொல்ல யாருக்கும் உரிமையில்லை. இதற்கு முன்பு 'குறத்தி மகன்' என்று படம் வந்துள்ளது. ஆகவே நரிக்குறவர் இனத்தின் சார்பில் நான் படத் தயாரிப்பாளர்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.''

இவ்வாறு கு. ரகுபதி கூறினர்.

இதன் மூலம் தேவையின்றி ஒரு சிலர் எழுப்பிய சந்தேகத் தடை நீங்கியது. 'கரைகடந்த குறத்தி' இதன் மூலம்தடை கடந்தாள்.

எஸ்.எம்.எம். புரொடக்ஷன்சாரின்இந்தப்படத்தில் வனிதாஸ்ரீ, விஜேத்குமார் ஜானகிராமன், எம். என். ராஜம்,எஸ்.ஆர். விஜயா, மனேபாரதி, சோலை, சிலோன் சின்னையா, மதுரை ஸ்ரீ ஜெயந்தி, ராஜப்பிரியா, நடராஜன் ஆகியோருடன் 40 நரிக்குறவர்களும் நடிக்கின்றனர்.

கண்ணதாசன், கங்கை அமரன், எம். ஜி. வல்லபன் பாடல்களுக்கு கங்கை அமரன் இசையமைக்கிருர்.

கதை வசனம் எழுதி மாந்துறைபாபுஜிடைரக்ட் செய்கிருர். திருச்சி எஸ். எம். எம், மியான் தயாரிக்கிருர்.